**ஸ்ரீமத் ஞானியார் சுவாமிகள் உபந்நியாசக் குறிப்புகளினின்று**

# உதிர்ந்த மலர்கள்

[**தொண்டன்**]

**1.** உலகத்தார் தினமும் தவறாது செய்யவேண்டியவை.

1. ஏதேனும் ஒரு சல்ல நூல் படித்தல்.
2. பெரியார் ஒருவருடன் கூடல்.
3. ஏதேனும் ஓர் அல்பதானம்.

**2.** ஆசாரியன் என்பவன்,

1. சாஸ்திர அர்த்தத்தை மனதில் தொகுத்தவன்.
2. பன்னைப்போல் மாணவர்களையும் இருக்க வைப்பவன்.
3. சாஸ்திரத்தைத் தானே சரிக்கிறவன்.

**3.** உத்தம பிதா எல்லோருக்கும் உதவும் பிள்ளையை விரும்புவான்.
மத்திம பிதா பரகதிக்காக உதவும் பிள்ளையை விரும்புவான்.
அதம பிதா தற்காலத்திற்குதவும் பிள்ளையை விரும்புவாள்.

---

**1.** உலகத்தில் சிறந்த பொருள் அன்பு. அன்பைக் காட்டிலும் சிறந்ததொன்றில்லை. முடிந்த முடிபாகும் அன்பு. அன்பாக வேறெந்த மொழியும் இல்லை. தமிழ் அன்பு மயமாக இருக்கிறது.

**2.** கடவுள் இரக்கம் உடையவர். நாம் துன்பம் உடையவர்கள். ஆகையால் இரக்கமுடைய அவர் சம்பந்தத்தாலேயே நம் துன்பம் நீங்க வேண்டும்.

**3.** நல்வினையின் பயனாகிய சுகத்தையும் தீவினையின் பயனாகிய துன்பத்தையும் சமமாக எண்ணுகின்ற நிலையில் கடவுள் கிருபை வருகிறது.

**4.** அடையாளத்திற்காகவும், வேண்டிய மங்களமடையவும், பரிசுத்தம் செய்து கொள்ளவும், ரக்ஷித்துக் கொள்ளவும் விபூதி அணிந்து கொள்வது வழக்கம்.

**5.** பக்தி என்பது ஞானத்தில் ஒரு பகுதியே. பக்தி செயல்வகையிலேயும் ஞானம் அனுபவவகையிலேயும் காணப் படுகின்றன.

**6.** நூல்களில் 3 வகை உண்டு.

1. நண்பனுக்கு உரைப்பது போலிருப்பவை,
2. மனைவி, புருஷனைத் தன் வயப்படுத்தல் போலிருப்பவை.
3. ஆசிரியன் மாணவனைக் கண்டித்தல் போலிருப்பவை.

7. உருவமில்லாத கடவுள் நம்மை ரக்ஷிக்காருபேற்கதுடன் வந்ததே அவதாரம் எனப்படும்.

---

1. குரு என்ற விதையில் லிங்கம் என்ற முளையும்சங்கமம் என்ற மாமும் தோன்றும். குரு இருந்து லிங்கத்தையும், சங்கமம் என்னும் அடியாரையும் காட்டல்வேண்டும்.

2. ஜலமும் அதன் நிழலும் பிரியாதிருத்தல் போலக்கடவுளும் அவர் அருளும் பிரியாது கண்ணுக்குப் புலப்படாது இருக்கும்.

3. ஒரு தாய் பருவத்திற்குத் தக்கபடி கைக் குழக்தைக்குப் பாலும் அதற்கடுத்த பருவத்தில் அன்னம் முதலியன கொடுப்பாளோ அதேபோல் ஈசன் நமக்கு நம் பக்குவத்திற்குத் தக்கபடி நம்மைப் பார்த்து அருள் செய்வார்.

4. மிகப் பழங்காலத்தில் ஞானத்தில் திருஷ்டியிருந்தது. அதற்குப் பின் பக்தியில் திருஷ்டியிருந்தது. இன்னும் பின்னர் புண்ணியத்தில் திருஷ்டியிருந்தது. தற்காலத்திலோ பணத்திலே திருஷ்டி.

5. கடவுளின் தயை பூவில் வாசனை போலும், வைரத்தில் ஒளி போலவும், பாலில் ருசி போலவும் பிரிக்கமுடியாதபடி இருக்கின்றது.

6. இல்லறத்தார்க்கு இருக்க வேண்டியவை அன்பும்அறமும். தயையோடு கூடிய தருமமே பெரும் தருமமாகும்.

---

1. அன்பும் அருளும் அறிவிற்கு அடையாளம். அறிவுள்ளவன் அன்பும் அருளும் உடையவன். சிற்றறிவுடையதுஉயிர். போறிவுடையது கடவுள். அன்பை வளர்க்க அறிவுவளரும். அறிவு வளரக் கடவுளை நெருங்குவோம்.

2. நன்றாக உணர்ச்சி இருக்கும்போதே ஆண்டவனைநினைத்தல் வேண்டும். பாபத்தை ஒழிக்க அவன் நாமத்தைசொல்லிக்கொண்டே இருக்க வேண்டும்.

3. அறுக்குஞ் சக்தி வாளுக்கு உண்டு. ஆனால் தானேஅறுக்க முடியாது. அதுபோல் நினைக்குஞ் சக்தி மனத்திற்குஉண்டு. உயிரின் முன் தான் மனம் நினைக்கும்.

4. அறிவு வளர வளர சுகம். ஆசை வளர வளர துக்கம். சுகத்தை வளர்க்க வேண்டுபவன் அறிவை வெளியே இந்திரியங்கள் வழியே செலுத்தாமல் உள்ளே இருக்கும் கடவுளிடத்துச் செலுத்தல் வேண்டும்.

5. நிலைத்த மனமுடையவன் முதலிலேயே ஜபிக்கலாம். முடியாதவன் முதலில் உரத்த தொனியில் தோத்தரிக்க வேண்டும், பொருள் தெரிந்து தோத்தரித்தல் வேண்டும். தோத்தரிக்கப்படுகிற பொருளை மனத்தில் நினைத்தே. தோத்தரித்தல் வேண்டும்.

சித்தாந்தம் - 1943 ௵ -
மார்ர்ச்சு, ஏப்ரல், மே, ஜூன், ௴